# 108 உபநிஷத்துகள்

## பாகம்-4



அநுராகம்

# 108 உபநிஷத்துக்களின் சுருக்கம்

(தொகுதி 4)

அ.வெ. சுகவனேச்வரன்



அருணோதயம்

19, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

**108 UPANISHATHKALIN SURUKKAM PART - IV**
❐ by A.V. SUGAVANESWARAN ❐ First Edition : 2005
❐ Published by ANURAGAM 19, Kannadhasan Salai, T.Nagar Chennai - 600 017. ❐ Typeset by : Sri Sathya Sai Graphics, Chennai - 600 017 ❐ Printed at : Sakthi Printers, Chennai - 600 021.

விலை ரூ 10.00






26. கௌஷீதகீ உபநிஷத், 27. ப்ருஹஜ்ஜாபாலோபநிஷத், 28. ந்ருஸிம்ஹ பூர்வதாபினீ உபநிஷத், 29. ந்ருஸிம்ஹ உத்தரதாபினீ உபநிஷத், 30. காலாக்னி ருத்ரோப நிஷத், 31. மைத்ரேயீ உபநிஷத், 32. ஸுபாலோபநிஷத், 33. க்ஷுரிகோப நிஷத் ஆகிய உபநிஷத்களின் சுருக்கம் இந்நூல்.

- அநுராகம்

# 108 உபநிஷத்களின் சுருக்கம்

## தொகுதி 4

## 26. கௌஷீதகீ உபநிஷத்

இது ரிக்வேத கௌஷீதகிப் பிராம்மணத்தைச் சார்ந்தது. வட மொழியில் குத்ஸிதம் என்றால் அல்பம் எனப் பொருள். இந்த சம்சாரத்தை அல்பமென்றும் வெறுக்கத் தக்கது என்றும் கருதினார் ஒரு ரிஷி. 'குத்ஸிதம்' என்ற சொல் மருவி, குஷீதகம் என்று ஆகி, அந்த ரிஷி குஷீதகர் என்ற பெயரைப் பெற்றார். அவருடைய மகன் கௌஷீதகி. அவர் பிராணனைப் பிரம்மமாக வழிபட்டவர். அந்த வழிபாடு இதில் முக்கியமாக விளக்கப்படுவதால் இது கௌஷீதகீ உபநிஷத் என்ற பெயரைப் பெற்றது.

சித்திரர் என்ற ரிஷி தனக்கு யாகம் செய்வதற்கு உதவ வந்த ரிஷிகளிடம் கேட்டார்: ''இந்த யாகத்தைச் செய்து, நீங்கள் என்னை எந்த உலகிற்கு அனுப்பப் போகிறீர்கள்? மறைவு பட்டுள்ள உலகிற்கா அல்லது மறைவு படாத உலகிற்கா?'' இதற்கு அவர்களால் பதில் கூற முடிய வில்லை. ஆகையால் சித்திரரே விளக்குகிறார். -காமிய கருமமாகிய யாகத்தின் பலனாய் ஒருவன் இரவு, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனம் முதலிய கால தேவதை களின் அருளால் சுவர்க்கத்தை அடைகிறான்; புண்ணியம் கழிந்ததும் மீண்டும் இவ்வுலகிற்குத் திரும்புகிறான்.

''இதை அறிந்தவன் ஆசைகள் அற்ற கருமங்களில் ஈடுபடுகிறான். பகல், சுக்கில பக்ஷம், உத்தராயணம் முதலிய கால தேவதைகளின் அருளால் பிரம்ம லோகத்தை அடைகிறான். பிரம்மா அவனுக்கு பிரம்ம லோகத்தையும் கடந்து போக வழிகாட்டுகிறார்.

* * *

கௌஷீதகீ மஹரிஷி பிராணனையே பிரம்மமாக வழிபடும் படி உபதேசிக்கிறார். பிராணனாகிய அரசனுக்கு மனம் தூதன், சொல் மனைவி, கண் மந்திரி, காது வாயிற் காப்போன். பிராணனாகிய பிரம்மம் எதையும் வேண்டாமலேயே, புலன்கள் வடிவான எல்லாத் தேவதைகளும் அதற்கு சேவை புரிகிறார்கள். இதையறிந்து, வழிபடுபவன் பிறரிடம் எதையும் யாசிப்பதில்லை; ஆனாலும் மற்ற எல்லோரும் அவனை நாடி, உபசரித்துப் போற்றுகிறார்கள்.

பிராணன் பிரம்மம் என்ற பைங்கிய மஹரிஷியும் கூறுகிறார். புலன்களை விடச் சிறந்தது மனம். மனத்தை விடச் சிறந்தது பிராணன். பிராணனுடைய உதவி இல்லாமல் மனம் வேலை செய்யாது.

மனதில் எழும் ஆசைகளை அடைய விரும்பும் ஒருவன், பிராணனே பிரம்மம் என்று தியானித்து, அதன் வசத்தில் எல்லாம் இருப்பதை உணர்ந்து, குறிப்பிட்ட சடங்குகளைப் புரிந்தால், விரும்பியது கை கூடும்.

பேசும் பொழுது, பிராண சக்தி சொல்லில் ஹோமம் செய்யப்படுவதாகவும், பேசாமல் மூச்சு விடும் பொழுது,

சொல் பிராண சக்தியில் ஹோமம் செய்யப்படுவதாகவும், தியானிப்பவன், ஆத்யாத்மிக அக்னி ஹோத்திரம் செய்பவனாகிறான் என்றும் இதில் சொல்லப்படுகிறது. அவன் அக்கினி ஹோத்திரம் என்ற சடங்கைப் புரிய வேண்டிய தேவை இல்லை.

பிராணனே எல்லா வேதங்களும் என்று வழிபடுபவன் புகழையும் செல்வத்தையும் அடைவான். அவன் முடிவில் சித்தியை அடைகிறான்.

ஒரு வேள்வியில் அக்கினியும் பிராணன், எல்லா குருமார்களும் பிராணன், வேத மந்திரங்கள் பிராண ஸ்வரூபம், வேள்வி புரிபவனும் பிராணன், எல்லாம் பிராண மயம் என்று தியானிப்பவன் எங்கும் நிறைந்த பிராண ஸ்வரூபியாகிறான்.

மனிதனுடைய சொல்லின் ஒலி பிராணசக்தியே என்று தியானம் செய்ய வேண்டும். பேசாத பொழுது, சொல் என்ற புலன் பிராணனாகிய பிரம்மத்தில் மறைந்திருக்கிறது. கண், காது முதலிய புலன்களின் செயல்களும் அப்படியே. எல்லாப் புலன்களை ஆளும் தேவதைகளும் அப்படியே பிராணனில் ஒடுங்குகின்றன; ஆனாலும் அவை இல்லாமல் போவதில்லை, மீண்டும் தோன்றுகின்றன என்பது ஆத்யாத்மிகப் படைப்பு. இந்த வழிபாட்டைப் புரிபவன் உள்ளிலிருக்கும் எதிரிகளான ஆசை, கோபம் முதலியவைகளையும் வெளியில் உள்ள எதிரிகளையும் வெல்கிறான்.

பிராணன் அனைத்திலும் சிறந்தது. பிராணனில்லாமல் எதுவும் ஒரு சிறிது கூட அசையாது என்பதற்கு ஒரு கதை உள்ளது.

ஒரு சமயம் சொல், கண் முதலிய எல்லாப் புலன்களும் தமது அஹங்காரத்தால், தத்தம் சிறப்பை நிலை நாட்ட விவாதித்தன. அப்பொழுது, எல்லாப் புலன்களும், பிராண னுடன் கூட, உடலை விட்டு வெளியேறின. உடல் ஒரு கட்டையைப் போலச் செயலற்றுக் கிடந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு சொல்லாகிய புலன் உடலுக்குள் நுழைந்தது. ஆனால் பேச முடியவில்லை. பிறகு கண் புகுந்தது; ஆனால் பார்க்க முடியவில்லை. பிறகு காது புகுந்தது; ஆனால் கேட்க முடியவில்லை. பிறகு மனது புகுந்தது. அப்பொழுது, பேசவோ, பார்க்கவோ, கேட்கவோ, சிந்திக்கவோ இயலவில்லை. முடிவில் பிராணன் புகுந்தது. உடனே உடல் அசைந்து இயங்கத் தொடங்கியது. அப்பொழுது சொல் முதலிய எல்லாப் புலன்களும் செயலாற்றும் சக்தியை மீண்டும் பெற்றன. பிராணன் தான் அனைத்தினும் சிறந்தது, பிராணன் இல்லாமல், மற்ற எந்தப் புலனும் இயங்க இயலாது என்பதை எல்லா இந்திரிய தேவதைகளும் உணர்ந்து கொண்டனர்.

(இதே கதையை சாந்தோக்கிய உபநிஷத் - V.1.லும், பிரஹதாரண்யக உபநிஷத் VI.1.1-14லும் காணலாம்.)

இந்த ரகசியத்தை நன்கறிந்த ஞானி, பிராணனுடன் ஒன்றுபட்டு இறுதிக் காலத்தில் இந்த உடலினின்றுக் கிளம்பி, வாயு தேவதையே அடைந்து, பிறகு ஆகாயத்தை அடைந்து, சுவர்க்கத்தை அடைகிறான். அங்கு பிராண னுடைய சாகா குணத்தை உடையவனாய், சொல் முதலிய எல்லாப் புலன்களும் தன்னிடம் ஸூக்ஷ்மமாக உள்ளவ னாய், அமர (சாகா) நிலையை அடைகிறான்.

* * *

அரசன் பிரதர்த்தினன், ஒரு சமயம், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த போரில் இந்திரனுக்கு உதவி புரிந்து அசுரர்களைத் தோற்கடிக்க வழி வகுத்தான். அவனுடைய வீரத்தை இந்திரன் புகழ்ந்து, வேண்டிய வரத்தைக் கேட்கும் படி கூறினான். மக்களுக்கு நன்மை புரியும் ஒன்றை இந்திரனே நிச்சயித்து அளிக்கும் படி பிரதர்த்தனன் பதிலளித்தான்.

இந்திரன் கூறினான்: ''என்னுடைய உண்மையான உருவத்தை அறிந்து கொள். (மாமேவ விஜானீயாத் கௌ.உ.III.1) அது தான் மக்களுக்கு உயர்நலம் அளிக்க வல்லது. நான் பிராணப் பிரம்ம வழிபாட்டால் அத்துடன் லயித்துள்ளவன் என்பதுதான் என்னிடத்திலுள்ள சிறப்பு. நான் கர்த்தா (நான்தான் எல்லாவற்றையும் புரிபவன்) என்ற அஹங்காரம் என்னிடத்தில் இல்லை. கருமத்தால் விளையும் பயனிலும் எனக்கு விருப்பம் இல்லை.'' என்று தொடர்ந்து கூறினான்.

மேலும் சொன்னான். ''நான் பிராணனுடன் ஒன்றிய பிரம்ம ஸ்வரூபி என்று அறிந்தவனை உலகம் கட்டுப்படுத்தாது. (யோ மாம் விஜானீயாத், நாஸ்ய கேனச கர்மணா லோகோ மீயதே கௌ.உ.III.1) என்று முடித்தான்.

பிரம்ம சூத்திரம் இந்த உரையாடலைக் குறிப்பிடுகிறது. (பி.சூ.I.1. 28-31) இங்கு தேவேந்திரன் என்ற தேவதையைக் குறிப்பிட்ட போதிலும், தியானம் செய்யப்பட வேண்டியது இந்திரனை இல்லை, பிரம்மத்தையே என்று உரையாசிரியர் கள் திட்டவட்டமாகக் கூறுகிறார்கள்.

* * *

பாலாகி என்ற அந்தணர் அரசன் அஜாதசத்ருவிடம் சென்று, தான் அவனுக்குப் பிரம்ம வித்தையை உபதேசிப்ப தாகக் கூறினான். அரசன் மகிழ்ந்து சம்மதிக்கவே, பாலாகி கூறலுற்றான். ''சூரிய மண்டலத்தின் உள்ளே வீற்றிருக்கும் புருஷனை நான் பிரம்மமாக வழிபடுகிறேன்'' என்றான். ''நான் அதை அறிவேன்'' என்றான் அரசன். பிறகு பாலாகி, சந்திரன், ஆகாயம், காற்று, அக்கினி, நீர் முதலிய எல்லா மண்டலங்களிலும் உள்ள புருஷனைப் பிரம்மமாகத் தியானிக்க வேண்டும் என்று கூறினான். அவை அனைத்தும் தனக்குத் தெரியும் என்றான் அரசன்.

பிறகு பேசாமலிருந்தான் பாலாகி. மேலும் தானே அவருக்கு உபதேசிப்பதாகக் கூறி, உறங்கிக் கொண்டிருந்த ஒரு மனிதனிடம் அரசன் அவனை அழைத்துச் சென்றான். உரக்க்க் கூவியும் அவன் எழுந்திருக்காததால், அரசன் அவனைத் தட்டி எழுப்பினாள்; அவனும் விழித்துக் கொண்டான்.

அரசன் பாலாகியைக் கேட்டான். ''உயிரற்றவனைப் போலக் கிடந்த இவன், இப்பொழுது எங்கிருந்து வந்தான்?'' பாலாகி பதில் கூறவில்லை. அரசன் விளக்கினான்: ''இதயத்துடன் தொடர்புள்ள ஹிதா எனும் நாடி உடலெங்கும் வியாபிக்கிறது. உறங்கும் பொழுது மனிதன் மிக ஸூக்ஷ்மமான அந்த நாடியில் ஒடுங்குகிறான். கனவு கூட இல்லாமல் அவன் தூங்கும் பொழுது அவன் பிராண சக்தி யுடன் ஐக்கியமாகி விடுகிறான். கண் காது முதலிய வற்றிலுள்ள சக்திகளெல்லாம் இதில் லயிக்கின்றன. அவன் விழிக்கும் பொழுது, அச்சக்திகள் போன வழியே மீண்டும்

திரும்பி வருகின்றன. (இக்கதையைப் பிரஹதாரண்யக உபநிஷத் III.1-லும் காணலாம்.)

உரையில் வாள் வைக்கப்பட்டிருப்பது போல, இதயத்தில் கட்டை விரல் அளவுள்ள புருஷன் உறைகிறான். அரணிக்கட்டையில் தோன்றிய அக்கினி விறகு முதலிய வற்றில் பற்றிப் பரவுகிறது போல, அறிவு மயமான ஆத்மா (பிரக்ஞானாத்மா), கால் நகம் முதல் தலை மயிர் வரை உடலின் எல்லாப் பகுதிகளிலும் பரவுகிறது. அறிவு மயமான ஆத்மா, சொல் முதலிய வடிவங்களிலுள்ள ஆத்மாவுடன் கூடி, ஒரு தனவான் தன் பரிவாரங்களுடன் கூடி மகிழ்வது போல, வாழ்க்கையின் இன்பங்களை அனுபவிக்கிறது. இந்திரன், தனது அறிவு மயமான ஆத்மாவை அறியாத வரை, அசுரர்களிடம் தோல்வியடை கிறான்; ஆத்மாவை அறிந்தபின் அவர்களை வெல்கிறான்.

இங்ஙனம் அறிந்த ஞானி, பாவங்களைப் போக்கி, மேலான பதவியையும், எல்லோரையும் ஆளும் திறமையை யும் அடைகிறான்.

## 27. ப்ருஹஜ்ஜாபாலோபநிஷத்

இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. சிவனுடைய ஐந்து முகங்களில் ஒன்றான ஸத்யோ ஜாதமுகத்திலிருந்து தோன்றிய காம தேனுவின் சாணத்திலிருந்து விபூதி உண்டாயிற்று. சிவனுடைய மற்ற நான்கு முகங்களிலிருந்து தோன்றிய தெய்வீகப் பசுக்களின் சாணத்திலிருந்து செய்யப்பட்டன பஸிதம், பஸ்மம், க்ஷாரம், ரக்ஷை எனப்படும். இவ்வைந்தும்

காரணப் பெயர்கள். நிறைந்த ஐசுவரியத்தை அளிப்பதால் பூதி; எல்லாப் பாவங்களையும் உண்டு விடுவதால் பஸ்மம்; பிரகாசிக்கச் செய்வதால் பஸிதம்; ஆபத்துக்களை அழிப்பதால் க்ஷாரம்; பூதப்ரேதம், பிசாசம், பிரம்மராக்ஷஸம், அபஸ்மாரம், பிறவி நோய் முதலியவற்றின் பயத்தினின்று காப்பாற்றுவதால் ரக்ஷா.

அக்கினியில் அமிர்தம் அடக்கம். அமிர்தத்தால் அக்கினி வளர்கிறது. அக்கினி - ஸோம வடிவான உலகம், ஹவிஸால் வளரும் அக்கினி போல் உளது. ஸோம சக்தி மேலேயும் அனலின் சக்தி கீழேயும் உள்ளது. இவ்விரண்டும் சேர்வதால் இவ்வுலகம் இடையறாது செயலாற்றுகிறது. மேலெழுந்த சக்தியே சிவம், மேலெழுந்த சிவமே சக்தி, இப்படிப்பட்ட சிவ சக்தியால் ஊடுருவப்படாதது உலகில் ஏதுமில்லை. பலமுறை அக்கினியால் எரிக்கப்பட்டு உலகம் பஸ்மமயமாகிறது. இது அக்கினியின் வீரியம். அந்த வீரியம் பஸ்மத்தில் அடக்கம். இவ்வாறு பஸ்மத்தின் மகிமையை உணர்ந்து மந்திரங்களால் பஸ்மஸ்நானம் செய்பவன், பாவங்களை எரித்து, முக்தியை அடைகிறான். ஸாதுக்கள் சாவை வெல்ல இந்த அமிருதஸ்நானம் கூறப்படுகிறது. சிவசக்தி அமிருதத்தால் தொடப்பட்டவனுக்குச் சாவு ஏது?

பஸ்மம் ஆக்கும் முறை நான்கு விதம். அவை, அனுகல்பம், உபகல்பம், உபோபகல்பம், அகல்பம். அக்கினி ஹோத்திரத்தில் விரஜா மந்திர ஹோமத்தால் உண்டாக்கப்படுவது அனுகல்பம். வனத்தில் உலர்ந்து

கிடக்கும் சாணியைச் சேகரித்து, கல்பத்தில் கூறியபடி உண்டாக்குவது, உபகல்பம்.

காட்டில் உலர்ந்த சாணியைப் பொடியாக்கி, சேமித்து வைத்துப் பசுவின் மூத்திரத்தில் பிசைந்து, உருட்டி, கல்ப முறைப்படி ஆக்கிய பஸ்மம் உபோப கல்பம். சிவாலயங் களில் பெறுவது அகல்பம், அது நூறு கல்பத்திற்குச் சமானம். இங்ஙனம், நான்கு வகையான பஸ்மமும் பாவத்தைப் போக்கி மோக்ஷத்தை அளிக்கும் என்று பகவான் காலாக்னி - ருத்திரர் கூறினார்.

புசுண்டர் பகவான் காலாக்னி - ருத்திரரிடம் முப்பட்டையாக விபூதி அணியும் முறையை வினவினார். பகவான் உடம்பில் எந்தெந்த இடங்களில் என்னென்ன மந்திரங்களைக் கூறி முப்பட்டையாக விபூதி அணிய வேண்டும் என்று விளக்கினார். நெற்றியில் ப்ரஹ்மனே நம: என்றும், இதயத்தில் ஹவ்யவாஹனாய நம: என்றும், நாபியில் ஸ்கந்தாய நம: என்றும், கழுத்தில் விஷ்ணவே நம: என்றும், மத்தியில் பிரபஞ்சநாய நம: என்றும், மணிக்கட்டில் வஸுப்யோ நம: என்றும், பின்புறம் ஹரயே நம: என்றும், உச்சியில் சம்பவே நம: என்றும், தலையில் பிரமாத்மனே நம: என்றும், கூறி அந்தந்த இடங்களில் விபூதியை முப்பட்டையாக அணிய வேண்டும். நெற்றியில் முப்பட்டையாக அணியும் பொழுது, முக்கண்ணனும், மூன்று குணங்களுக்கு ஆதாரமாயுள்ளவரும், மும்மூன்றான அனைத்தையும் தோற்றுவிப்பவரும், ஆகிய பிரபுவை நம: சிவாய என்று வணங்கவும், இது முப்பிறவிகளில் செய்த பாவங்களைப் போக்கும்.

முப்பட்டை விபூதியை நிந்திப்பவர்கள் சிவனையே நிந்திப்பவர்களாவார்கள். அதைப் பக்தியுடன் அணிபவர் கள் சிவனையே அணிகிறார்கள். திருநீறு இல்லாத நெற்றி பாழ். சிவாலயம் இல்லாத கிராமம் பாழ். சிவபூஜை இல்லாத பிறவி பாழ். சிவ சம்பந்தமில்லாத கல்வி பாழ். ருத்திராக்கினியின் சிறந்த வீரியம் திருநீறு எனக் கூறப் படுகிறது. ஆகையால் எல்லாக் காலங்களிலும் திருநீறு அணிந்திருப்பவன் வீரியமுடையவனாகிறான். அக்கினியி லிருந்து தோன்றிய நீறு, அதில் நிலைபெற்ற பஸ்ம நிஷ்டனுடைய தோஷங்களைப் போக்கி விடுகிறது. திருநீறு பூசித் தூய்மையானவன் பஸ்ம நிஷ்டன் எனப்படுகிறான்.

திருமூலர் கூறுகிறார்.

**கங்காணன் பூசுங்கவசத் திருநீற்றை**
**மங்காமல் பூசி மகிழ்வீரே யாமாகில்**
**தங்கா வினைகளும் சாரும் சிவகதி**
**சிங்காரமான திருவடி சேர்வரே.**

*(திருமந்திரம் 1666)*

பொருள்: எலும்பு மாலையை அணிந்த சிவன் பூசும் கவசத் திருநீற்றை, அதனுடைய ஒளி கெடாமல் பூசி மகிழ்வீராயின், முன் வினைகளும் உங்களிடம் தங்கா. சிவகதியும் உங்களிடம் வந்து அடையும். ஆனந்த மயமான திருவடியை அடையலாம்.

கௌதம ரிஷியின் திருமணத்தில், அஹல்யாவைக் கண்ணுற்ற தேவர்கள், அவளுடைய அழகில் மயங்கி, காம வேகத்தால் பாதிக்கப்பட்டார்கள். அதனால் ஞானத்தை

இழந்தவர்களாய்த் துர்வாஸ மஹரிஷியை அணுகி, இதைப் பற்றி வினவினார்கள். அவர் அந்தத் தோஷத்தைப் போக்குவதாக வாக்களித்து, முன்பு சதருத்ர மந்திரத்தால் மந்திரித்த விபூதியைக் கொடுத்து, இதனால் பிரம்மஹத்தி முதலிய தோஷங்களும் சாந்தி அடையும் என்று கூறினார்.

இந்த விபூதி எல்லா ஐசுவரியங்களையும் அளிக்க வல்லது. அதன் முன் வசுக்களும், வலது புறம் ருத்திரர் களும் பின்புறம் ஆதித்தர்களும், இடது புறம் விச்வே தேவர்களும், நடுவில் பிரம்ம விஷ்ணு மஹேசுவரர்களும் பக்கங்களில் சூரிய சந்திரர்களும் இருப்பர்.

விதேஹ நாட்டரசர் ஜனகர் யாக்ஞவல்கியரை அணுகி, முப்பட்டை விபூதி அணியும் முறையைக் கேட்டார். ஓத வேண்டிய மந்திரங்களையும் அணியும் முறையையும் விளக்கினார் மஹரிஷி. கடைசியில் 'த்ரயம்பகம்' என்ற மந்திரத்தால் தலை, நெற்றி, மார்பு, தோள்களில் குழைத்த விபூதியை அணிந்து ஒருவன் பரிசுத்தனாகவும், மோக்ஷத் திற்குரியவனாகவும் ஆகிறான். சதருத்ர ஜபத்தால் அடையும் பயனை அடைகிறான். இது தான் பஸ்ம ஜ்யோதி எனப்படும் என்று விளக்கினார் யாக்ஞவல்கியர்.

ஸனத்குமாரர் பகவான் காலாக்கினி ருத்திரரை அணுகி, ருத்திராக்ஷம் அணியும் முறையை விளக்கும்படி கேட்டார். அவர் கூறினார். ருத்திரருடைய கண்களிலிருந்து ஆதியில் ருத்ராக்ஷம் தோன்றியது, (வடமொழியில் அக்ஷி என்றால் கண் என்று பொருள்.) ஊழிக் காலத்தில், ஸம்ஹாரம் முடிந்ததும், நெற்றிக் கண்ணை மூடிய பொழுது,

அக்கண்ணிலிருந்து தோன்றியது ருத்ராக்ஷம். அப்படிப் பட்ட ருத்திராக்ஷத்தைக் கையால் தொட்டு, உடலில் அணிந்த மாத்திரத்தில், ஒருவன் இரண்டாயிரம் கோதானம் செய்த பலனை அடைவான்.

பிருஹத் ஜாபால உபநிஷத்தை ஜபம் செய்பவர் அழியாத உயர்ந்த இன்பமும் அமைதியும் நிறைந்த பரமபதத்தை அடைகிறார்கள்.

## 28. ந்ருஸிம்ஹ பூர்வதாபினீ உபநிஷத்

அதர்வ வேதத்தைச் சார்ந்த இவ்வுபநிஷத் பகவான் நரசிம்ஹர் மனித உருவும் சிங்க உருவும் ஒருங்கே கொண்டவர் என்றும், ரிதம் எனும் காணும் உலகின் ஒழுங்காகவும், ஸத்தியம் எனும் அடிப்படை உண்மை யாகவும் விளங்கும் பரப்பிரம்மம் பார்ப்பதற்குப் பயங்கர மாக இருந்த போதிலும், எல்லோருக்கும் நல்லதைச் செய்யும் சங்கரர் (வடமொழியில் சங்கரர் எனும் சொல் சம்+கரோதி என்று பிரிந்து 'நல்லதைச் செய்பவர்' எனும் பொருள்படும்.) கழுத்தில் கருப்பும் அதற்கு மேல் பிரகாச மான சிகப்பு நிறமும் படைந்தமையால், நீலலோஹிதர் எனப்படுவார் எல்லாத் தேவர்களின் உருவத்தில் இருக்கும் நரசிம்மர், இன்னொரு வடிவில், உமாபதியும் பசுபதியும் ஆவார். அவரைப் பற்றிய துதியை அறிபவர் மோக்ஷத்தை எய்துவர்.

பிரம்மா தேவர்களுக்கு மந்திர ராஜன் எனப்படும் நரசிம்ம மந்திரத்தை உபதேசித்தார். அதனால் அவர்கள்

மரணத்தை வென்றனர். எந்த மஹிமையால் எல்லா ஜீவராசிகளையும் கவர்ந்து, படைத்து, வளர்த்தி, உயர்த்தி, அழிக்கிறாரோ அதனால் 'உக்ரம்' எனப்படுகிறார். எந்த மஹிமையால் எல்லா ஜீவராசிகளையும் விளையாடச் செய்து, ஒய்வளித்துப் படைத்து, வளர்த்துக் கவருகிறாரோ அதனால் 'வீரன்' எனப்படுகிறார். எல்லா உலகங்களையும் வியாபித்து ஊடுருவி இருப்பதால், அவர் 'மஹா விஷ்ணு' எனப்படுகிறார். எதனால் எல்லாவற்ற்றையும் தனது பிரகாசத்தால் பிரகாசிக்கச் செய்கிறாரோ, அவற்றில் ஜ்வலிக்கிறாரோ, அவைகளை ஜுவாலை விடச் செய்கிறாரோ அதனால் ''ஜ்வலன்'' எனப்படுகிறார்.

புலன்களில்லாமலேயே, எதனால் எல்லாவற்றையும் பார்க்கிறாரோ, கேட்கிறாரோ, எங்கும் வியாபித்து அனைத்திலும் உறைகிறாரோ அதனால் 'ஸர்வதோமுகம்' எனப்படுகிறார். எல்லாப் பிராணிகளிலும் வீரியம் மிக்கதாகவும் சிறப்பு மிக்கதாகவும் விளங்குவது சிங்கம். அதனால் பரமேச்வரன் நரசிங்கமாக அவதரித்தார். அழிவில்லாத இந்த வடிவம் உலகிற்கு உயர்ந்த நன்மை புரிவதாக ஆயிற்று. அதனால் 'நரசிம்மம்' எனப்படுகிறார். எவருடைய உருவத்தைப் பார்த்து எல்லா உலகங்களும் பயந்து ஓடுகின்றனவோ எவர் எதற்கும் அஞ்சுவதில்லையோ அவர் 'பீஷணன்' எனப்படுகிறார்.

தான் மங்களமே உருக்கொண்டவராகி எப்பொழுதும் மங்களத்தை அளித்து, உயர் நலத்தைச் செய்வதால், 'பத்ரன்' எனப்படுகிறார். தன்னுடைய மஹிமையால், தன்னுடைய பக்தர்கள் தன்னை நினைந்த மாத்திரத்தில், சாவையும்

அகால மரணத்தையும் அழிக்கிறாரோ, அதனால் அவர் 'ம்ருத்யு - ம்ருத்யு' எனப்படுகிறார். எல்லாத் தேவர்களும், பிரம்மவாதிகளும் அவரை வணங்குகிறார்கள். அதனால் அவர் 'நமாமி' எனப் போற்றப்படுகிறார்.

அழகும் ஒழுங்குமே (நிறம்) உருக்கொண்ட இவ்வுல கிற்கு முன்னால் தோன்றியது பிரம்மம். உணவை மற்றவர் களுக்குக் கொடுப்பவன் அதனால் தன்னைக் காத்துக் கொள்கிறான். இவ்வாறு அறிந்து கொடுக்காவிடில், உண்பவனை உணவாகிய பிரம்மமே உண்டு விடுகிறது.

நரசிம்ம சக்தியான மாயை இவ்வுலகனைத்தையும் படைத்துக் காத்து அழிக்கிறது. இந்த மாயா சக்தியை அறிபவன் சாவைக் கடக்கிறான். உண்டாகிய இவ்வுல கனைத்திற்கும் ஆகாசமே உறைவிடம். எல்லா உயிர்களும் ஆகாசத்தில் உண்டாகி, வாழ்ந்து, அதிலேயே புகுந்து மறைகின்றன. அதுவே வானத்தில் செல்லும் சூரியனாக வும், இடைவெளியில் வாயுவாகவும், யாக மேடையில் அக்கினியாகவும், வீடுகளில் அதிதியாகவும் விளங்குவது. இதை அறிந்தவன் மந்திரத்தின் ரகசியத்தை அறிவான்.

பிரம்மா தேவர்களுக்குப் பின்வரும் நரசிம்ம காயத்ரியை உபதேசித்தார். 'ஓம் ந்ருஸிம்ஹாய வித்மஹே வஜ்ரநகாய தீமஹி: தந்ந: ஸிம்ஹ: ப்ரசோதயாத்!! இது வேதங்களுக்கும் தேவர்களுக்கும் உறைவிடம். இதை இவ்வாறு அறிந்தவன் வேதங்களுக்கும் தேவர்களுக்கும் உறைவிடமாவான்.

தேவர்கள் பிரம்மாவை அணுகி, மோக்ஷத்திற்கு வாயி லாக உள்ள மஹாசக்கிரத்தை உபதேசிக்கும் படி வினவி

னார்கள். பிரம்மா ஸுதர்சனம் எனும் மஹாசக்கிரத்தைத் தேவர்களுக்கு உபதேசித்து, அதனுடைய முப்பத்தி இரண்டு இதழ்களில் நரசிம்ம மந்திர ராஜனின் எழுத்துக்கள் இருப்பதை விளக்கினார். அது எல்லா விருப்பங்களையும் பூர்த்தி செய்வது. இறுதியில் மோக்ஷத்தை அளிக்கவல்லது.

## 29. ந்ருஸிம்ஹ உத்தரதாபினீ உபநிஷத்

அதர்வ வேதத்தைச் சார்ந்த இவ்வுபநிஷத், பிரம்மா தேவர்களுக்கு உபதேசிப்பதாக அமைந்துள்ளது. இந்தப் பிரபஞ்சத்தில் உள்ளது எல்லாம் ஓம் என்ற எழுத்தே. சென்றது, நிகழ்வது, வரப் போவது எல்லாம் அதன் விளக்கமே. எது முக்காலத்திற்கு அப்பால் உளதோ, அதுவும் ஓங்காரமே. இது எல்லாம் பிரம்மமே. ஆத்மாவும் பிரம்மமே. இந்த ஆத்மாவை ஓம் என்ற பிரம்மத்துடன் ஒன்றுபடுத்தி, பிரம்மத்தையும் ஆத்மாவுடன் ஒன்றுபடுத்தி, அந்தப் பிறப்பற்றதும், இறப்பற்றதும், அமிர்த மயமானதும் பயமற்றதுமான பிரம்மத்தை 'ஓம்' என்று அனுபவித்து, அதில் இவ்வனைத்தையும், முவ்வகைச் சரீரத்தையும், ஏற்றித் தன்மயமாக்கி, அதுவேயாகி, முடிக்க வேண்டும்.

இந்த ஆத்மா விழிப்பு, களவு, உறக்கம், துரீயம் என நான்கு பாதங்களை உடையது. துரீயம் பார்க்க முடியாதது, விவரிக்க முடியாதது. கிரகிக்க முடியாதது, அடையாளமேது மில்லாதது, நினைக்க முடியாஜது, சுட்டிக்காட்ட முடியாதது. ஒன்றே ஆத்மா என்ற ஞானத்தால் மட்டும் அனுபவிக்கத் தக்கது. அது ஐந்து இயற்கைச் சக்திகளின் விரிவாகிய

பிரபஞ்சம் ஒடுங்கிய நிலை. சிவம், சாந்தம், அத்வைதம் என்ற இதையே நான்காவதாகக் கருதுகின்றனர். அதுவே ஆத்மா, அதுதான் அறியத் தக்கது.

நன்கு பிரகாசிப்பதும், ஒரே ஆனந்தமாகிய ரஸம் நிறைந்ததும், மூப்பற்றதும், சாவற்றதும், அமிருதமும், அபயமுமாகிய பிரம்மத்தின் நான்கு பாதங்களை ஓங்காரத்தின் நான்கு மாத்திரைகளுடன் ஒன்றுபடுத்த வேண்டும்.

மாத்திரையற்றதாயும், சிவமாயும், பிரபஞ்சம் ஒடுங்குமிடமாயும், விவரிக்க முடியாததாயும், இரண்டற்றதாயும் நான்காவதாயும் உள்ள இந்த ஓங்காரமே ஆத்மா. இங்ஙனம் அறிபவன் தன்னால் தானேயாகிய ஆத்மாவை அடைகிறான். இவன் நரசிம்ம மந்திர ராஜத்தால் துரீயத்தை அறிந்து கொள்வான். இரண்டற்றதாயும், ஆனந்த வடிவாயும் உள்ள ஆத்மா நான் என்று அவன் தியானிக்க வேண்டும். அப்படிச் செய்பவன் நரசிம்மனே ஆவான்.

இத்துடன் பின் வரிகளை ஒப்பிடலாம்.

ஓமெனும் ஓங்காரத்துள்ளே யொருமொழி
ஓமெனும் ஓங்காரத்துள்ளே யுருவரு
ஓமெனும் ஓங்காரத்துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே

*- திருமூலர் / திருமந்திரம் / 2676.*

**பொருள்:** ஓம் என்ற பிரணவத்திற்குள்ளேயே உபதேசத்திற்குரிய ஒரு மொழி தோன்றும். அஃது உருவையும் அருவையும் தனக்குள் கொண்டது. அதில் பல வேறுபாடுகள்




உள்ளன. இத்தகைய ஓம் என்ற பிரணவத்தை அறிவதில் மேலான சித்தியும் முத்தியும் உண்டாகும்.

இங்ஙனம் வழிபடுபவன் உலகப் பொருள்களில் ஆசையற்றவனாகவும் ஆத்மா ஒன்றிலேயே ஆசை உள்ளவனாகவும் இருப்பான். அகாரத்தில் உயர்வற உயர் நலமாகிய ஆத்ம ஸ்வரூபத்தைத் தியானிப்பவன் நரசிம்ம தெய்வமாகிய பிரம்மத்தில் நிலை பெறுகிறான். அவனே நரசிம்ம தெய்வமாக விளங்குவான்.

தேவர்கள் இந்த ஆத்மாவை அறிய விரும்பினார்கள். அசுர இயல்புடைய பாவம் அவர்களைப் பீடித்தது. அதிலிருந்து விடுபடுவதற்கு அவர்கள், ஓங்காரத்தின் உச்சியில் விளங்கும் துரீய ஆத்மாவாகிய நரசிம்மரை வழிபட்டதும் அசுர வடிவான பாவமே ஸச்சிதானந்த ஸ்வரூப ஜோதியாகி விட்டது. (விஷமே மருந்தாவது போல.) அந்தத் தேவர்கள் மன அமைதி உடையவர்களாகவும், ஆத்மாவிலேயே பற்றும், லீலையும், கூட்டுறவும், ஆனந்தமும் உடையவர்களாகவும் பிரணவத்தையே பரப்பிரம்ம ஆத்ம பிரகாசமாகவும், அறிந்தனுபவித்து அதில் லயமடைந்தார்கள். ஆகையால், அவ்வாறே ஸாதகன் ஓங்காரப் பரப்பிரம்மத்தில் நிலைபெற வேண்டும்.

அகாரத்தால் பரப்பிரம்மத்தைத் தியானித்து, மகாரத்தால் மனதைக் கடந்து. மனதிற்கு ஸாக்ஷியாயிருக்கும் நிலையை நாட வேண்டும். இப்படித் தியானத்தால், ஆத்ம ஸ்வரூபமான நரசிம்மமாகவே ஆகிறான்.

இந்த ஆத்மா துரீயத்தால் குறுக்கும் நெடுக்கும் ஊடுருவப் பெற்றுள்ளது. நரசிம்ம வடிவான இதில் அனைத்தும் உளது. நரசிம்மமும், துரீயாத்மாவும், ஓங்காரப் பொருளும் ஒன்றே; அது அனைத்தையும் விழுங்குவது. இதுவே ஒன்றே யாகிய பரமேச்வர ஸ்வரூபம்.

பிரஜாபதி தேவர்களுக்கு உபதேசித்தார். ''பின் நின்று சாக்ஷியாகப் பார்ப்பவனும், உடன் நின்று எண்ணுபவனாக வும் உள்ளவன் அந்த ஆத்மா. அதுவே ஸிம்மம், சித்ரூவம், விகாரமில்லாதது, எங்கும் அடையக் கூடியது. அதைத் தவிர இரண்டாவதாக வேறொன்றும் கிடையாது. எங்கும் வியாபித்த ஆத்மாவை ஓங்கார உபாசனையால் அறிந்து கொள்ளுங்கள். அறிபவனாக இரண்டற்ற ஆத்மாவை உங்களுக்குள்ளேயே இருப்பதாக அறியுங்கள்!''

## 30. காலாக்னி ருத்ரோப நிஷத்

கிருஷ்ணயஜுர் வேதத்தைச் சார்ந்த இந்த உபநிஷத் தில், பகவான் காலாக்னிருத்திரர் ஸனத்குமாரருக்கு, அவர் கேட்டுக் கொண்டபடி, முப்பட்டை விபூதியை அணியும் முறையைத் தத்துவ விளக்கத்துடனும் அதற்குப் பொருள், இடம், அளவு, கோடு, மந்திரம், சக்தி, தெய்வம், கர்த்தா, பயன் ஆகியவற்றுடனும் உபதேசித்தருளுவதாக அமைந் துள்ளது. அக்கினி ஹோத்திர பஸ்மமே பொருள்.

மூன்று கோடுகள் ஒன்றின் கீழ் ஒன்றாக நெற்றியில் புருவ மத்தி, கண்கள் வரைக்கும், இடுவதின் சாஸ்திரப் பிரமாணம் வருமாறு: முதல் கோடு கார்ஹபத்யாக்கினி, அகாரம், ரஜோகுணம், பூலோகம், ஸ்தூல சரீரம், க்ரியா

சக்தி, ரிக்வேதம், காலை வழிபாடு, தேவதை மஹேச்வரன். இரண்டாவது கோடு தக்ஷிணாக்னி, உகாரம், ஸத்வகுணம், அந்தரிக்ஷம், அந்தராத்மாவாகிய மனம், இச்சாசக்தி, யஜுர் வேதம், நடுப்பகல் வழிபாடு, தேவதை ஸதா சிவன். மூன்றாவது கோடு ஆஹவனீயாக்னி, மகாரம், தமோகுணம், வானுலகம், பரமாத்மா, ஞானசக்தி, ஸாமவேதம், மாலை வழிபாடு, தேவதை மஹாதேவன்.

இந்த முறைப்படி செய்யும் அறிவாளி அவன் பிரம்மச்சாரியோ, கிருஹஸ்தனோ, வானப்பிரஸ்தனோ, ஸந்நியாசியோ, எவனாயினும் மஹாபாதக உப பாதகங் களினின்று பரிசுத்தனாவான்; எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நாநம் செய்தவனாவான். எல்லா வேதங்களையும் ஓதியவனாவான். எல்லாத் தேவர்களையும் உணர்ந்தவனா வான். எப்பொழுதும் எல்லா ருத்திர மந்திரங்களையும் ஜபித்தவனாவான். எல்லாப் போகங்களையும் அனுபவிப் பான். உடலை விட்ட பின் சிவசாயுஜ்ஜியமடைவான். மீண்டும் பிறக்கமாட்டான் என்று பகவான் காலாக்கினிருத்திரர் கூறி முடித்தார். இதைப் படிப்பவனும் அங்ஙனமே ஆவான் என்று கூறுகிறது உபநிஷத்.

## 31. மைத்ரேயீ உபநிஷத்

மைத்திரேய மஹரிஷி பரமசிவனிடம் பெற்ற உபதேசத்தைக் கூறுவதாக அமைந்துள்ள இந்த உபநிஷத் ஸாம வேதத்தைச் சார்ந்தது.

வைராக்கியமடைந்த அரசன் பிரஹத்ரதன், மூத்த மகனிடம் ராஜ்ஜிய பாரத்தை ஒப்படைத்து விட்டுக்

காட்டிற்குச் சென்றான். அங்கு சூரியனை நோக்கித் தவம் செய்தான். சிறந்த ஆத்ம ஞானியான பகவான் சாகாயன்யர் அங்கு வந்தார். பிரஹத்ரதன் அவரை வணங்கி உபதேசம் வேண்டினான். பிரஹத்ரதன் இருப்பதே சிறந்த ஆத்ம ஞானியின் நிலை என்றார் சாகாயன்யர். அதை விளக்குமாறு வேண்டினான் அரசன். பகவான் விளங்கக் கூறினார்.

புலன்களின் விஷயத்தில் ஈடுபட்டவன் உயர்ந்த பரம பதத்தை நாடுவதில்லை. தவத்தால் நல்ல புத்தியும் மனமும் ஏற்பட்டு, ஆத்மாவையும் முக்தியையும் அடையலாம். அலைச்சல் இல்லாத மனம் ஆத்மாவில் ஒடுங்கும். தன்னிடம் ஒடுங்கிய மனம் ஸந்நியாஸத்தை நாடும். முயன்ற மனதைப் பரிசுத்தமாக்கினால், அது ஆத்ம வடிவாகும். தெளிவடைந்த மனம், புண்ணிய பாவ கர்மாக்களை அழித்து, ஆத்மாவில் நிலைபெற்று, அழிவில்லாத சுகத்தை அனுபவிக்கிறது. புலன்களில் பற்று வைத்த மனம், அதே பற்றைப் பிரம்மத்திடம் வைத்தால், அந்த ஜீவன் முக்தியடைவான்.

பரமேச்சுவரன் மனதிற்கும் வாக்குக்கும் எட்டாதவர். அவர் ஆதியும் அந்தமும் இல்லாதவர், அறிவு மயமாய்ப் பிரகாசிப்பவர். எண்ணங்களில் அடங்காதவர். தள்ளவும், கொள்ளவும் முடியாதவர். குணமும் குறியும் அற்றவர். மாறுபடாதவர். ஆழம் காணமுடியாதவர். இருளுக்கும் ஒளிக்கும் அப்பாற்பட்டவர். கற்பனைக் கெட்டாதவர். பரம சாந்த ஸ்வரூபமான ஞான ஒளியாய் விளங்குபவர். ஸத்தியமுமாயும் ஸூக்ஷ்மமாயும் எங்கும் நிறைந்தவராயும், இரண்டற்றவராயும், ஆனந்தக் கடல் போன்றவராயும்,

உள்ள அந்தப் பரமேச்வரனே நான் என்று தியானம் செய்ய வேண்டும்.

வர்ணாசிரம தர்மங்களில் புத்திகெட்டு கருமங்களில் ஈடுபடுபவர்கள், அவற்றின் பயனை அடைகிறார்கள். அவைகளைத் துறந்து ஆத்ம ஞானத்தில் திளைப்பவர்களே உண்மையான புருஷர்கள்.

இத்துடன் மாணிக்கவாசகப் பெருமாள் பரமசிவனைக் குறித்துப் பாடிய திருவாசக மொழிகளை நினைவு கூரலாம்.

i. எண்ணுதற்கு எட்டா எழில் ஆர் கழல் இறைஞ்சி

- *சிவபுராணம் 1/22*

ii. விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கு ஒளியாய்
எண் இறந்து, எல்லை இலாதானே

- *சிவபுராணம் 1/23-24*

iii. சொல்லற்கு அரியானைச் சொல்லித் திருவடிக் கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்

- *சிவபுராணம் 1/92-93*

iv. ஊனம் தன்னை ஒருங்கு உடன் அறுக்கும்
ஆனந்தம்மே ஆறா அருளியும்.

- *கீர்த்தித் திருவகவல் 2/105-106*

v. அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க

- *திருவண்டப்பகுதி 3/51-52*

vi. அவனும நானும் உடனே காண்க.
பரமானந்தப் பழங்கடல் அதுவே

- *திருவண்டப் பகுதி 3/65-66*

vii. சொற்பதம் கடந்த தொல்லோன்

- *திருவண்டப் பகுதி 3/111*

viii. மின் ஒளி கொண்ட பொன் ஒளி திகழ

- *திருவண்டப் பகுதி 3/125*

ix. முத்தா போற்றி, முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி

- *போற்றித் திருவகவல் 4/122-123*

x. சாதி விடாத குணங்கள் நம்மோடு
சலித்திடும் ஆகாதே

- *திருப்படை ஆட்சி 49/8*

*பொருள்: முக்குணங்களும் அவைகளினின்று உருவெடுத்து வருகிற ஜாதி வேதங்களும் நிர்விகல்ப சமாதியில் இடம் பெறுவதில்லை.*

*பகவான் மைத்திரேயர் கைலாயம் சென்று பரமசிவனை தத்துவ உபதேசம் செய்தருளும்படி வேண்டினார். சிவன் உபதேசித்தார். தேகமே தேவாலயம். அதில் உறையும் ஜீவனே சிவன். அக்ஞானமாகிய பழைய பூவை விலக்கி, ஸோஹம் (நானே அவன்) என்ற புதிய மலர்களால் வழிபடவும்.*

*வேறுபாடற்ற நோக்கே ஞானம். பல்வேறு சிந்தனை களில் அலை பாயாத மனமே தியானம். மனதிலுள்ள அழுக்கைப் போக்குவது ஸ்நாநம். புலனடக்கம் பரிசுத்தம். உடலைக் காப்பதற்காக உண்ணும் உணவு பிரம்மாமிர்தம்.*

*மனதைச் சுத்தி செய்வது உலக நினைவு தேக நினைவு, சாஸ்திர நினைவு ஆகிய மூன்றையும் போக்குவதே யாகும்.*

ஞானமும் வைராக்கியமுமாகிற மண்ணாலும் தண்ணீராலும் மனிதன் தன்னையே சுத்தி செய்து கொள்ள வேண்டும்.

ஒரு மனிதன், அஹம்காரமாகிய மகனையும், பொருள் ஆகிய சகோதரனையும் மோஹமாகிய வீட்டையும், ஆசையாகிய மனைவியையும் எப்பொழுது துறக்கிறானோ, அப்பொழுதே அவன் முக்தன் ஆகிறான்.

கல், உலோஹம், ரத்தினம், மண் இவைகளால் புனையப்பட்ட விக்கிரஹங்களை வழிபடுவதால், மீண்டும் இன்பங்களையனுபவிக்கும் பிறவியை ஒருவன் அடைவான். ஆகையால் துறவி, தன் இதயத்திலேயே வழிபடுபவனாய், வெளி வழிபாட்டை விட்டுவிட வேண்டும். எல்லா விருப் பங்களையும் துறந்தபின், எது எஞ்சுமோ அதுவாக இரு.

அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் ஆகிய வற்றையும், அவைகளின் நினைவையும் துறந்து, அறிவின் முதல் தோற்றமாகிய ஆத்மா ஒன்றையே நாடு.

பரம்பொருளாகவும், பிரம்மமாகவும் அனைத்திற்கும் உற்பத்திஸ்தானமாகவும் நானேயாகவும் நான் இருக் கிறேன். எல்லா உலகங்களுக்கும் குருவாகவும், எல்லா உலகங்களிலும் உறைபவனாகவும் நான் இருக்கிறேன். உடல், குணம், பற்று இவைகளற்றவனாக நான் இருக்கிறேன். நான் எப்பொழுதும் ஸத்ரூபமாயிருப்பதால் மெய்க்கும் பொய்க்கும் அப்பாற்பட்டவன். நான் போக்கு வரவு அற்றவனாய் இருப்பதால் நான் போய்ச் சேர வேண்டிய இடம் ஏதும் இல்லை. இப்படியாகப் பரமசிவன் உபதேசத்தை முடித்தார்.

# 32. ஸுபாலோபநிஷத்

சுக்ல யஜுர் வேதத்தைச் சார்ந்த இந்த உபநிஷத் ஸுபாலர் என்ற மஹரிஷிக்கும் பிரம்மாவிற்கும் நடந்த உரையாடலைக் குறிப்பிடுகிறது. ஆகையால் இதற்கு இப்பெயர் வந்தது. பிரம்மா, தன் பதில்களில், அவ்வப் பொழுது ரைக்வமஹரிஷிக்கு எழுந்த சந்தேகங்களையும், அதற்குக் கோர ஆங்கிரஸர் கொடுத்த விளக்கங்களையும் ஸுபாலருக்குக் கூறுகிறார். இவைகள் பிரபஞ்சத்தைப் பற்றியும், பிரம்மத்தின் தன்மைகளைப் பற்றியும் குறிப்பிடு கின்றன.

முதலில் ஸத் (இருப்பது) அஸத் (இல்லாதது) ஸதஸத் (இருந்தும் இல்லாமலிருப்பது) என்ற ஒன்றுமே இல்லை. பிறகு அறியாமை உண்டாயிற்று. அதிலிருந்து வரிசையாக அஹம்காரம், அதிலிருந்து ஆகாசம், அதிலிருந்து வாயு, வாயுவிலிருந்து அக்கினி, அதிலிருந்து நீர், நீரிலிருந்து பூமியும் தோன்றின. அவை சேர்ந்து பெரிய முட்டை வடிவாயிற்று. இறைவன் அதை இரண்டாகப் பிரித்தார். கீழ்பாகம் பூமியாகவும், மேல் பாகம் ஆகாயமாகவும் ஆயிற்று. இடையில், கணக்கற்ற தலைகள், கண்கள் எல்லாம் கொண்ட ஒரு தெய்வீகப் புருஷ வடிவம் தோன்றிற்று. பிறகு மரணம் படைக்கப்பட்டது. பிரம்மா வுடைய உடலிலிருந்து மக்கள் தோன்றினர். காதுகளி லிருந்து வாயுவும், பிராணனும் உண்டாயின. அவருடைய இதயத்திலிருந்து காணும் இப்பிரபஞ்சமெல்லாம் படைக்கப் பட்டது.

பரமபுருஷன், படைக்கும் காலத்தில், தன்னை இரண்டாகப் பாதி ஆணாகவும், பாதி பெண்ணாகவும் ஆக்கிக் கொண்டார். தேவனாகி தேவர்களையும், ரிஷியாகி ரிஷிகளையும், அந்தந்த வடிவாகி யக்ஷர், ராக்ஷசர், கந்தர்வர் முதலானவர்களைப் படைத்தார். பிறகு எல்லாப் பிராணிகளையும் படைத்தார். பிரளய காலத்தில் அக்கினி வடிவம் கொண்டு எல்லாவற்றையும் எரித்தார். இயற்கைச் சக்திகளும், புலன்களும், ஒன்றில் மற்றொன்றாக ஒடுங்கின. அவ்யக்தம் அக்ஷரத்திலும், அக்ஷரம் தமஸிலும் கரைந்தன. தமஸ் பரமாத்மாவில் ஒன்றிவிட்டது. அதற்கப்பால் எதுவும் இல்லை. இதுதான் நிர்வாணம் எனும் பதம். இங்ஙனம் வேதத்தின் உபதேசம்.

ஆதியில் எதுவுமில்லை. பிறப்பற்ற மாறுபாடற்ற ஆத்மா மட்டும் இருந்தது. அதை ஸத்தியத்தாலும், தானத்தாலும், தவத்தாலும், உபவாசத்தாலும், பிரம்மசரியத்தாலும், வைராக்கியத்தாலும் அடைய வேண்டும். தமம் (புலனடக்கம்), தானம், தயை ஆகிய மூன்றையும் எப்பொழுதும் கடைப்பிடிக்க வேண்டும். அவனுடைய பிராணன்கள் இங்கேயே லயமடைகின்றன. பிரம்மமாயிருந்து அவன் பிரம்மத்தை அடைகிறான்.

இதயாகாசத்தில் உத்தமமான கோசத்தில் ஒளி வீசும் ஆத்மா உறங்குகிறது. நன்றாகத் தூங்கும் பொழுது ஒரு விதமான ஆசையும் அதற்கில்லை; கனவுகளையும் அது காண்பதில்லை. அங்கு உற்றாரோ, நல்லாரோ, பொல்லாரோ எவருமில்லை. ஒளி மயமாயும் அமிர்தமயமாயும் அந்த

ஆத்மா உளது. சென்ற வழியிலேயே அது மீண்டும் விழிப்பு நிலைக்குத் திரும்புகிறது.

இந்த ஆத்மா எல்லாமறிவது, அனைத்தையும் ஆள்வது, அனைத்திற்கும் அதிபதி, அனைத்துள்ளும் இருந்து கொண்டு இயக்கும் அந்தர்யாமி. அனைத்திற்கும் பிறப்பிடம். எல்லாச்சுகமும் இதை நாடி வருகிறது; இது எந்த சுகத்தை யும் நாடுவதில்லை. இதை வேத சாஸ்திரங்கள் வழிபடு கின்றன; இது எதையும் வழிபடுவதில்லை. இது அனைத்தை யும் அன்னம் போல் உண்கிறது. இது எதாலும் உண்ணப் படுவதில்லை. மேலும், அனைத்திற்கும் வழிகாட்டியாக வும், அடக்கி ஆள்வதாயும் அது உள்ளது. இது நிர்வாணம் என்ற மோக்ஷ நிலையைப் பற்றிய வேதத்தின் உபதேசம்.

உடலுக்குள் புத்தி குகையில் மறைந்து நித்தியமான ஒருவர் இருக்கிறார். அவருக்கு பூமி உடல். அவர் பூமிக்குள் இருக்கிறார்; அவரைப் பூமி அறியாது. அவருக்கு மனம் உடல். மனதிற்குள் அவர் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார். எனினும் மனம் அவரை அறியாது. அவரே எல்லா உயிர்களிலும் அந்தராத்மா, ஒளி வீசும் தெய்வம் ஒன்றே யாகிய அவர் தான் நாராயணர். இது மோக்ஷத்தைப் பற்றிய வேதத்தின் கட்டளை.

உடலுக்குள்ளே புத்தி குகையில் இந்த ஆத்மா உளது. சித்திரம் எழுதும் சுவர் போன்ற, நிலையற்ற இந்த உடலில் உறையும் ஆத்மா நினைக்க வொண்ணாத ஒளி பொருந்திய, தெய்வீக வடிவமானது, பற்றற்றது, ஒளியே உடலாகக் கொண்டது. ஆனந்தமாய்ப் பிரகாசிக்கும் அதை புத்தி

குகையில் ஞானிகள் காண்கிறார்கள். அத்துடன் ஒன்றாக லயித்த பின், அதைத் தனியாகக் காண்பதில்லை.

எல்லாம் கண்ணில் புகுந்து மறைகிறது; கண் அஸ்தமித்தால் பார்க்கப்படும் பொருளில் மறைகிறது; பொருள் ஆதித்தியனிடமும், வரிசையாக ஒவ்வொன்றும் மற்றதிலும், கடைசியாகத் துரீயம் அமிர்தத்திலும் மறைகின்றன. இதை அறிந்தவன் ஆத்மாவாகிறான்.

எல்லா உலகங்களும் ஆத்மாவில் பிரம்மத்தில் மணிகளைப் போல் குறுக்கும் நெடுக்குமாகக் கோக்கப்பட்டுள்ளன. இதை அறிந்தவன் ஆத்மாவாகவே ஆகிறான். இதுதான் நிர்வாணம் எனும் மோக்ஷத்தைப் பற்றிய வேதத்தின் உபதேசம்.

இதயத்தின் நடுவில் நான்கு நாடிகள் உள்ளன. ரமா என்பது புண்ணியத்தின் பயனாய் ஜீவனைப் புண்ணிய லோகத்திற்கு அழைத்துச் செல்லுகிறது. அரமா எனும் நாடி பாவ லோகத்திற்கு அழைத்துச் செல்லுகிறது. இச்சா நாடியின் மூலமாக மரண காலத்தில் நினைப்பதை அடைகிறான். அபுனர்ப்பவா எனும் நாடியில் கிளம்பும் ஜீவன், தலை உச்சியைப் பிளந்து, சாவைக் கடந்து பரமாத்மாவுடன் ஒன்றுபடுகிறது. இதுதான் நிர்வாணம் எனும் மோக்ஷ நிலை.

ஞானி உணவை நாராயணனிடமிருந்து வந்ததாகவும், பிரம்ம லோகத்தில் பக்குவமானதாகவும், மீண்டும் சூரியனிடத்தில் பக்குவமானதாகவும் கொள்ள வேண்டும்.

எவரிடமும் யாசிக்காமல், தானாகவும் சமைக்காமல் கிடைத்த சுத்தமான உணவை உண்ண வேண்டும்.

ஞானி குழந்தையைப் போலப் பற்றற்றவனாகவும், குற்றமற்றவனாகவும் இருக்க வேண்டும். நன்கு படித்துப் புலமை உள்ளவனாகவும், பேசாமல் மௌனத்தைக் கடைப்பிடித்துமிருக்க வேண்டும். அதனால் எல்லையற்ற கைவல்ய பதவியை அடைவான். துறவு பூண்டு, கிழிந்த துணியை உடுத்தி, மரத்தடியில், சமாதி நிலையில் இருக்க வேண்டும். ஆசைகளைச் செரித்தவனாய், ஆசைகளின் பூர்த்தியை அடைந்தவனாய், மரண பயம் அற்றவனாய் இருக்க வேண்டும். மிருத்யுவாகிய பரம புருஷனிடம் எல்லாம் முடிவில் ஒடுங்கி ஒன்றுபடுகின்றன. இது தான் நிர்வாணம் எனும் மோக்ஷ நிலையைப் பற்றிய உபதேசம்.

பூமியாகிய உணவை நீர் உண்கிறது. வரிசைக் கிரமத்தில் நீர், அக்கினி, வாயு, ஆகாயம், புலன்கள், மனம், புத்தி, அவ்யக்தம், அக்ஷரம், மிருத்யு, பின்னது முன்னதை உணவாக உண்கிறது. மிருத்யு பரம்பொருளில் ஒன்றுபட்டு ஒடுங்கு கிறது. அதற்கப்பால் ஒன்றுமில்லை. அதுதான் நிர்வாணம். விக்ஞான மயமாகிய ஜீவன் உடலை விட்டுக் கிளம்பி, எல்லாவற்றையும் எரித்துப் பரம்பொருளுடன் ஒன்று படுகிறான். அப்பால் ஒன்றுமில்லை. அதுவே நிர்வாணம். இறைவனிடத்திலும் குருவினிடத்தும் பக்தியுள்ள மஹாத்மா விற்கே இங்கு கூறிய பொருள்கள் விளங்குகின்றன.

# 33. க்ஷுரிகோபநிஷத்

இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. க்ஷுரிகா என்ற வடமொழிச் சொல் கத்தி எனப் பொருள்படும். ஞானமாகிற கத்தியால் கருமத் தளைகளை வெட்டி, முக்திக்கு வழி காட்டுவதால் இந்த உபநிஷத் இப்பெயரைப் பெற்றது.

யோக சித்தியில் நிலை பெற்று மீண்டும் பிறவா நிலையை அடைய இது வழி கோலுகிறது. கால்களிலிருந்து தொடங்கி மேலே செல்லும் வழியைத் தியானம் செய்யும் முறையை இந்த உபநிஷத் விளக்குகிறது. கழுத்திற்கு மேலே உள்ள இடை, பிங்களை என்ற இரு நாடிகளுக்கு நடுவே உள்ள ஸுஷும்னா எனும் நாடியைக் காண வேண்டும். அந்தச் சிறந்த நாடியைக் காண்பவனே வேத ரகசியத்தை அறிந்தவன். ஸுஷும்னா நாடிதான் பரம்பொருளில் லயிக்கச் செய்வது, மாசற்றது, பிரம்ம வடிவானது.

பிறகு சித்தத்தை ஜயித்த இவன் சாந்தமான இடத்தில் இருந்துகொண்டு பற்றற்றவனாய், தத்துவ யோகத்தை உணர்ந்து, ஆசையற்றவனாய், மெதுவாக அணையும் விளக்கு எப்படி எரிந்துவிட்டு ஒடுங்குகிறதோ, அப்படி ஒடுங்க வேண்டும். யோகத்தை உணர்ந்தவன், தீவிரமான பிராணாயாமத்தாலும், ஓங்காரத் தியானத்தாலும், வைராக்கிய மாகிற சாணையில் தீட்டியதாலும், கூர்மையான மனதாகிற கத்தியால் சம்சார பந்தத்தை வெட்டிப் பின் எல்லாத் தளைகளிலிருந்தும் விடுபடுகிறான்.

திருமூலர் பாடுகிறார்.

இடையொடு பிங்களை என்னும் இரண்டும்
அடைபடு வாயுவும் மாறியே நிற்கும்

- *திருமந்திரம் 665*

*பொருள்: நாதத்தில் ஒடுங்கியவற்கு, இடை, பிங்களை அடைபட்டுச் சுழுமுனை (ஸுஷும்ணா) திறக்கும்.*





## இந்த நூலில்

26. கௌஷீதகீ உபநிஷத்
27. ப்ருஹஜ்ஜாபாலோபநிஷத்
28. ந்ருஸிம்ஹ பூர்வதாபினீ உபநிஷத்
29. ந்ருஸிம்ஹ உத்தரதாபினீ உபநிஷத்
30. காலாக்னி ருத்ரோப நிஷத்
31. மைத்ரேயீ உபநிஷத்
32. ஸுபாலோபநிஷத்
33. க்ஷுரிகோபநிஷத்

